[31st October 1958

*Export of jaggery*

* 732 *Q.*—SRI S. LAZAR: Will the Hon. the Minister for Home be pleased to state whether the Government have requested the Centre to increase the quota for the export of jaggery to other countries like Malaya, Singapore, Ceylon, etc.?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: The question does not arise as jaggery is licensed freely for export.

*Poigaimalai Reserve Forest*

* 733 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN: Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether any representation, dated 26th November 1957 was received from the President, Ananthapuram Krishi-Thozhilalar Co-operative Society, Limited, Kadukkarai, Azhagiapandipuram, Thovala taluk, Kanyakumari district, regarding the extension of the lease period of the Poigaimalai Reserve Forest; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) The answer is in the affirmative.

(*b*) The Ananthapuram Krishi-Thozhilalar Co-operative Society, Limited, Kadukkarai, has since been granted an extension of lease for a further period of three years.

*Scholarship to college students*

* 734 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) நமது ராஜ்யத்திலுள்ள கல்லூரிகள் எத்தனை? (ஜில்லாவாரியாக).

(ஆ) சர்க்கார் நடத்தும், தனியார் நடத்தும் கல்லூரிகள் எத்தனை?

(இ) 1957–58-ல் ஒவ்வொரு கல்லூரியிலும் படிக்கும் மாணவர்களுக்கு—

(1) எத்தனை பேர்களுக்கு ரெசிடென்ஷியல், நான்-ரெசிடென்ஷியல் ஸ்காலர்ஷிப் கொடுக்கப்பட்டது?

(2) எவ்வளவு தொகை?

(ஈ) அதில் (1) பின்தங்கியவர்கள், (2) தாழ்த்தப்பட்டவர்கள், (3) மற்றவர்கள் எத்தனை பேர்?

(உ) மாணவர்களுக்கு ஸ்காலர்ஷிப் பணம் கிடைப்பதில் ஏற்படும் தாமதத்தை குறைக்க அரசாங்கம் என்ன நடவடிக்கைகள் எடுத்திருக்கிறது?

THE HON. SRI C. SUBRAMANIAM: A statement[a] is laid on the table of the House.

SRI V. K. KOTHANDARAMAN: ஸார், சர்க்காரால் நடத்தப்படும் கல்லூரிகளைவிட மூன்று மடங்கு அதிகப்படியாக பிரைவேட் மானேஜ்மெண்டார் கல்லூரிகளை நடத்தி வருகிறார்கள். அந்தக் கல்லூரிகளில் எல்லாம் ஜாதியின் அடிப்படையில் 100-க்கு 80 பங்கு கல்லூரிகளில் எந்த ஜாதியினரால் நடத்தப்படுகிறதோ அந்த ஜாதியினருக்குத்தான் சலுகை அளிக்

[a] Printed as Appendix I on page 268 infra.

31st October 1958]

கப்பட்டு வருகிறது. இதனால் மற்றவர்களுக்கு இடம் கிடைப்பது கஷ்டமாக இருக்கிறது. ஆகவே இதைத் தடுக்கின்ற முறையில் சர்க்கார் ஏதாவது நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : மற்றவர்களுக்கு இடம் கிடைப்பதில்லை என்று சொல்லுவது உண்மையல்ல. ஆர்ட்ஸ் காலேஜ் களிலும், ஸயன்ஸ் காலேஜ்களிலும் எத்தனை மாணவர்கள் வந்தாலும் சேர்த்துக்கொள்வதற்குத் தயாராக இருக்கிறார்கள்.

SRI K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, கல்லூரி விடுதி களில் இருக்கும் மாணவர்களுக்கு குறித்த நேரத்தில் ஸ்காலர்ஷிப் கிடைப் பதில் தாமதம் ஏற்பட்டு வருகின்றது. இதை விரைவு படுத்த அரசாங்கம் ஏதாவது நடவடிக்கை எடுத்திருக்கிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : சில சமயங்களில் தாமதம் ஏற்படுகிறது. அதைத் தவிர்க்க தக்க நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகின் றது.

SRI K. VINAYAKAM : Sir, from the paper placed in the table of the House, in answer to clauses (*c*) and (*d*) of the question it is stated that the time and labour involved in collecting the particulars required will not be commensurate with the object in view. Is it absolutely impossible for the college authorities or even for the Director of Harijan Welfare to supply us with the information asked for? This information is absolutely necessary in the interests of the Backward Classes as well as the Scheduled Castes.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I cannot make a searching enquiry in respect of 92 colleges. If the total number of scholarships given in the year 1957–58 is required, I can give that information.

SRI M. KALYANASUNDARAM : On point of order, Sir, அமைச்சர் அவர்கள் சொல்லுகிற சமயத்தில் ஒவ்வொரு கல்லூரியில் இருக்கும் மாணவர்களில் எத்தனை பேருக்கு ரெசிடென்ஷியல், நான்-ரெசிடென்ஷியல் ஸ்காலர்ஷிப் கொடுக்கப்படுகிறது என்பதைத் தெரிவிப்பது கஷ்டம் என்று சொன்னார்கள். மொத்தமாக எவ்வளவு கொடுக்கப் பட்டிருக்கிறது என்கிற விவரத்தை சொல்லுவதில் கஷ்டம் ஒன்றுமில்லை என்று நம்புகிறேன். இந்த விபரம் ஹரிஜன வெல்பேர் டிபார்ட்மெண்டி லிருந்தே அறியலாம். ஆகவே . . . . .

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்தக் கேள்வியின் ஒரிஜினல் தமிழில் இருக்கிறது. அதில், கேள்வி (இ)-யி1957–58-ல் ஒவ் வொரு கல்லூரியிலும் படிக்கும் மாணவர்களுக்கு எத்தனை பேர்களுக்கு ரெசிடென்ஷியல், நான்-ரெசிடென்ஷில் ஸ்காலர்ஷிப் கொடுக்கப்பட்டது ? என்று கேட்கப்பட்டிருக்கிறது. ஆகவே இந்த விபரம் சேகரிப்பது . . . . . .

SRI M. KALYANASUNDARAM : The question is very clear.

In clause (*c*) it has been asked : (i) the number of College students who were granted residential and non-residential scholarship in 1957–58, and (ii) the amount granted therefor.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I have got the Tamil version of the question which is the original question. Perhaps the translation is wrong.

[31st October 1958

SRI M. KALYANASUNDARAM : Then, I am not pressing my point of order.

SRI S. M. ANNAMALAI : ஸார், வட ஆற்காடு மாவட்டத்தில் ஆறு கல்லூரிகள் இருப்பதாக சொல்லப்பட்டிருக்கிறது. ஆறு கல்லூரிகள் அங்கு இருந்தும் அங்கு மாணவர்கள் இடம் கிடைக்காமல் திண்டாடுகிறார்கள். ஆகவே வேலூரில் இருக்கும் முஸ்லீம் உயர்நிலைப் பள்ளியை கல்லூரியாக மாற்றுவதற்கு சர்க்கார் முன் வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்போது இருக்கிற கல்லூரிகளுக்கே மாணவர்கள் இல்லை. அப்படியிருக்கும்போது அதிகப்படியாக காலேஜ்களை ஏற்படுத்துவதற்கு சர்க்காருக்கு உத்தேசமில்லை.

*Basic and Basic Training Schools*

*** 735 Q.**—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) இந்த ராஜ்யத்தில் நடைபெறும் ஆதாரக் கல்வி பயிற்சிப் பள்ளிகள் எத்தனை ?

(ஆ) அவைகளில் நடந்த தொழில் மூலம்—

(1) கடந்த 3 ஆண்டுகளில் ?

(2) இந்த ஆண்டில் அரசாங்கத்திற்குக் கிடைத்த வருமானம் எவ்வளவு ?

(இ) ஆதாரக் கல்விப் பள்ளிகள் எத்தனை ?

(ஈ) அவற்றின்மூலம் மேற்கண்ட 3 ஆண்டுகளில் கிடைத்த தொழில் வருமானம் எவ்வளவு ?

(உ) இந்த எல்லா ஸ்தாபனங்களிலும் விற்பனை இன்றித் தேங்கி இருக்கும் பொருள்களின் மதிப்பென்ன ?

(ஊ) இப் பள்ளிகள் செய்த சமூக சேவையின் விவரம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : A statement [a] is placed on the table fo the House.

SRI A. VEDARATHNAM : தலைவர் அவர்களே, ஆதாரப் பள்ளிகளில் படிக்கின்ற மாணவர்களுக்கு அவர்களுடைய சுயதேவைப் பூர்த்தி விஷயமாய் குறிப்பிட்டிருக்கின்ற டைரக்டர் அவர்களுடைய ப்ரொஸீடிங்ஸ்-ஸில் மினிமம் அவர்களுக்கு தேவைப்படுகிற வருமானம் வரவேண்டுமென்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. அவ்விதம் எல்லாப் பள்ளிகளிலும் இந்த மினிமம் வருகிறதா ? இல்லையென்றால் இந்த மினிமம் ஒவ்வொரு பள்ளிகளிலும் வருவதற்கு அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதற்கான புள்ளி விவரங்கள் இப்போது என்னிடம் இல்லை.

SRI R. KRISHNASAMI NAIDU : கனம் சபாநாயகர் அவர்களே, ஆதார ஆரம்பப் பள்ளிகளில் மாணவ மாணவிகள் நூற்கும் நூற்சிட்டங்கள் எல்லாம் அந்தந்த பகுதிகளில் இருக்கும் பயிற்சிப் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்பப்படுகின்றன. இவ்விதம் கொடுக்கப்பட்ட நூற் சிட்டங்கள் அங்கே தேங்கி இருப்பதாகக் கேள்விப்படுகிறேன். ஆதலால் இவ்விதம் தேங்கிக்கிடந்து அதன் தரம் கெட்டுப்போவதாகவும் தெரிகிறது. இதை உபயோகிப்பதற்கு சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதைப்பற்றி கவனிக்கச்சொல்லுகிறேன்.

[a] Printed as Appendix II on pages 268-269 infra.